# தபால்தந்தி இலாகாவின் அடிப்படை விதிமுறைகளில் புதிய மாற்றங்கள் வேண்டும்

( By T. S. R. )

தபால் தந்தி இலாகாவின் அடிப்படை விதிமுறைகளைத் தன்னகத்தே அடக்கிக்கொண்டிருப்பதாக பெருமிதமடைந்து கொள்ளும் தபால் தந்தி இலாகாவின் இன்றைய வேடயமாக விளங்கும் P அண்டு T வால்யூம்கள் என்று சொல்லப்படுகின்ற விதிமுறை தொகுப்புக்களில் எவ்வளவோ கோளாறுகளும், தாறுமாறுகளும், மலிந்து கிடக்கக்காண்கிறோம்—இதற்காக வருந்துகிறோம். இந்தப் பெருங்குறையை நாமும் பல நாட்களாகவே இலாகாவின் அன்புப் பார்வைக்கு—இல்லை கூரியபார்வைகளுக்கு மிக கண்ணியத்தோடும், பொறுமையோடும், எடுத்துக்காட்டியிருக்கிறோம்.

P & T வால்யூம்களின் விதிமுறைகள் அதன் கீழ் அடங்கிக்கட்டுப்பட்டிருக்க வேண்டிய பல்லாயிரக் கணக்கான ஏழைத்தொழிலாளிகளுக்குக் கண்ணீரைத்தான் பரிசாக அளிக்கிறதேயல்லாது வாழ்வையும் அன்பையும் நன்றியறிதலையும் வாரித் தருவதாக இல்லை என்று நாம் பலமுறைவிளக்கவும் செய்திருக்கிறோம். அது போதாதுபோல் தெரிகிறது. ஆகவே தபால் இலாகாவின் ஊழியர்களின் நல்வாழ்விற்கும் முன்னேற்றத்திற்கும் அந்த வால்யூம்கள் மிகப்பெரும் தடைக்கற்களாக பல்வேறு விதிவிலக்குகளைத் திரைக்குள்ளே மறைத்து வைத்துக்கொண்டு, அந்த அருமைத்தபால் தொழிலாளி முன்னேறும் போதெல்லாம் இடறி வீழச் செய்கிறது என்பதை நாம் மீண்டும் மீண்டும் எடுத்துச் சொல்லவேண்டியிருக்கிறது.

சுதந்திர இந்தியாவில்—சமத்துவமும் சமுதாய நேர்மையும் ஏற்பட்டுவிட்டதாக விண்ணதிரக் கொக்கரிக்கும் நம்நாட்டில்—இதயம்போல் விளங்கும் தபால் இலாகாவிற்கு இன்னமும்கூட வேற்றுநாட்டான்—போய்விட்ட வெள்ளையன்—வகுத்துச் சென்ற விதிமுறைகளும் சட்டதிட்டங்களும் தான் அடிப்படை விதிமுறைகளாக இருக்க வேண்டும், என்ற தேவையற்ற வீண் பெருமை ஏன் தான் இருக்கவேண்டுமோ நமக்குப்புரியவில்லை. இது எதன்பாற் பட்ட நியதிக்கு என்றே நம்மால் விளங்கிக்கொள்ள முடியவில்லை

சோஷியலிச சமுதாயம் உருவாக வேண்டுமென்று நாட்டின்பெருந்தலைவர்களெல்லாம்திட்டம் தீட்டி பிரச்சாரம் செய்து வரும் இந்த நேரத்திலே பரங்கியனின் சட்ட நுணுக்கம் இன்னும்கூட தேவையா என்பதை நம்மவர் எண்ணிப்பார்க்க வேண்டும். பிரித்தாளும் சூழ்ச்சியால் மக்களின் ஏகோபித்த உணர்ச்சிகளை பெரும் நாசக்காட்டிலே தள்ளிவிட்ட வெள்ளையன் கொள்ளையையும், பறிமுதல் செய்வதையும் மனிதாபிமானத்தை மதிக்காத கொடிய வேதனைப்பணியையும் நம்மை அடிமையாக்குவதற்கென்றே ஒரு சேரப் பெற்றிருந்த வெள்ளையன்—நம்மை ஏய்க்கவும், நமது உழைப்பைச் சூறையாடவும் நமது ரத்தத்திலே ஆனந்த நீராடவும் சிலபல வேதனை திட்டங்களை தீட்டிவைத்து நம்மை ஆட்சிபுரிந்தவர்திருக்கிறான் என்பது எவரால் மறுக்கமுடியும். அந்த கோர ஆட்சியின் கொடிய விளைவுகளிலே ஒன்று தான் இந்த P&T வால்யூம். எப்போதோ சுதந்திரம் கேட்டவர்களை பிரித்தாள அவன் வகுத்த பல திட்டங்களிலே சிலபல நிர்வாகத்திலேயும் புகுந்துவிட்டகாரணத்தினால் அது நம்மைவெகுவாக பாதித்து விட்டது. அவனுக்கிருந்த சூழ்நிலையிலே பயத்திலே-நமது ஏகோபித்த உணர்ச்சியிலே அவன் கொண்டிருந்த நடுக்கத்திலே அவன் அதனைச் செய்தாலொழிய உயிர் வாழமுடியாதென்ற நிலையிருந்தது. ஆகவே அவன் தன் நிர்வாகவசதிக்கேற்ற அடிமைச்சாஸனம் தயாரித்து 'அதற்கு விதிமுறைகள்' என்று பெயரிட்டுவிட்டான், ஆனால் அதே விதிமுறைகள் இன்னமும்—ஏன் இன்றும் கூட நமக்குத் தேவைதானா என்பதே நமது பெருமூச்சு கலந்த கேள்வியாகும். சுதந்திரம் பெற்றுவிட்டோம்—சூழ்நிலையில் மாற்றமும் கண்டுவிட்டோம் சோஷியலிசம் பேசுகிறோம். இன்னும்கூட அது தேவையா நமக்கு? அதிலே அமைப்புமுறைகளும், தொகுப்புச் செறிவுகளும் சட்டநுணுக்கங்களும், விதிமுறையின் தெளிவுகளும் மலிந்து கிடக்கலாம். பின்பற்றுவதற்கேற்ற வசதியாகவும் கூட அது இருக்கலாம். ஆனாலும் கூர்வேலாக அது நமது இதயத்தை துளைக்கும்போது நமக்கு எவ்வளவு வேதனை பிறக்கிறது என்பதை எவரே அறியமுடியும்? உரிமைகளில் தலையிடுவதும் ஒருவரை யொருவர் தாழ்த்தி மதிப்பிடுவதும் அதன் கூரிய ஷரத்துக்களென்பதை எவரே மறுக்க முடியும்? எனவே அது இன்னமும்கூட ஏனிருக்க வேண்டும்? காலத்திற்கேற்ப— சூழ்நிலைக்கேற்ப—மனிதாபிமானத்திற்கேற்ப—இருக்கும் சட்டங்களை எந்த நாட்டிலும் எந்த நேரத்திலும் எவரும்வெறுத்

தொடுக்கமாட்டார்கள். ஆனால் இதுவோ உடன் பிறந்தே கொல்லுகிறது. எனவேதான், இதனைத் தேவையில்லை என்கிறோம்.

காலம்மாறிக்கொண்டே வருகிறது; அந்த வேகத்தோடு நாம் மோதிக்கொள்ளக்கூடாது. அதுவும் பழைய சாதனங்களை வைத்துக்கொண்டு புதிய மாற்றங்களை தேவைக்கேற்ப—வசதிக்கேற்ப—சூழ்நிலைக்கேற்ப செய்துகொள்ளத்தான் வேண்டும். அதுதான் ஜனநாயக முறை! என்றும் மாறுதலை உணர்ச்சிக்கேற்ப சட்டத்தெளிவும் பயன்தருவதாக இருக்கவேண்டும். காலம்மாறி, சட்டம் மாறாமலிருந்தால் அதிலே தெளிவுபிறக்காது—தெளிவுதான் கிடைக்கும்; பயனும் விளையாது ஆகவே ஒதுசீர்தர அமைப்பு முறை தவறாது இந்த புதிய புதிய மாற்றங்களை விதிமுறைகளின் அடிப்படையிலேயிருந்து செய்துகொண்டே வரவேண்டும். அப்போதுதான் சமுதாய நேர்மையும் சமத்துவமும் பேசுவதன் உண்மைப் பொருளும் நமக்குக் கிடைக்கும். இந்த அமைப்பு முறைகளிலே பொது மக்களை அபிப்ராயம் கேட்டறிவதும்கூட ஒரு முறையாக இருக்கவேண்டும். அவர்களின் நல்லுரை இந்த பெருமிதம் மேலும் மேலும் வளர்க்குமேயல்லாது கெடுக்காது. இதனை நினைவாக மனதிலே கொள்ளவேண்டும்.

ஒரு சமுதாய முன்னேற்றத்தின் மிகத்திறமையான பகுதியை மக்களோ—மற்றவர்களோ—வேற்றுநாட்டார்களோ போற்றவேண்டுமென்றால், முதன்முதல் அந்த சமுதாய அமைப்புமுறையானது உயர்ந்த வகுப்பினரின் வீண்பிரதாபத்திற்கும், அவர்களின் பரிதாபத்திற்கும் ஆட்பட்டிருக்கக் கூடாத நிலையில் நாட்டின் பெருவாரியான மக்கள் கூட்டத்தினைப் பாதுகாக்கவேண்டும். வகுப்பு வெறியர்களின் பிடியிலேயிருந்து அவர்களைக் காப்பாற்றவேண்டும். அதில்தான் சமுதாய சமத்துவம் அடங்கியிருக்கிறது. அந்த சமத்துவம் நிலைபெற வேண்டுமானால் சமுதாயத்திலே புகுத்தப்பட்டு விட்ட வகுப்புவாதப் பிரிவுகள் ஒழிக்கப்பட வேண்டும். அப்போதுதான் பல நாட்களாகவே நின்று நிலவிவரும் தேவையற்ற வர்க்கப் போராட்டங்கள் ஒழியும்! சட்டத்தின் முன்—சமுதாயத்தின் முன்—கடவுளின் முன் எல்லோரும் சமம் என்ற நிலைபிறக்கும்.

தபால் தந்தி இலாகாவின் விதிமுறைத் தொகுப்புக்களைப் பொறுத்தமட்டில் இந்தபடி மனிதாபிமானத்தை இழிவுபடுத்தும் வகையில் ஒருவரையொருவர் இழித்தும் பழித்தும் கூறுவதோடு இல்லாமல் சட்டரீதியாக நிர்ணயிக்கவும் செய்யும் எல்லா சட்டங்களும் முதலில் ஒழிக்கப்பட்டேயாக வேண்டும். இந்த விதி முறைகளின் அடிப்படைத் திட்டங்களை மாற்றியமைப்பதற்கென்று ஒருகமிட்டி நியமிக்கப்பட்டால் அந்த கமிட்டியின் முக்கியமானதும் முதன்மையானதுமான வேலையிதுதான். ஒருவரின் உரிமைகளிலும் வசதிகளிலும் தலையிட்டு பாழ்படுத்தும் சட்டம் ஒரு சட்டமாகாது. அதை மாற்றுவதிலே யாருக்கும் பெருத்தநஷ்டம்ஏற்பட்டு விடாது. ஆனால் ஒருசிலருக்கு அதில் லாபம் கிடைக்கலாம், சிலரின் வாழ்க்கையல்ல, நடத்தைகூட இதனால் பாதிக்கப்படலாம். ஆனால் இந்த பெரும்கோளாறும் இந்த சட்டத்தின் அடிப்படையிலே எழுந்ததுதான். ஒருசட்டத்தின் நோக்கத்தையே குலைப்பது. அதில்காணும் சில பலமுறைபாடுகள் முரண்பாடுகள்—தடுமாறுகள்தான். இதனால் லஞ்சம் பெருகுகிறது. இந்த லஞ்சம் பெறும் எண்ணம் செழித்துவளருவதுதான் சட்டத்தின் அடிப்படையே ஆட்டம் காணுகிறது? அதன் நோக்கம் சிதைந்து எண்ணமும் பாழ்பட்டு இறுதியில் அது சாத்தியமில்லாததாகவே செய்யப்பட்டுவிடுகிறது. எனவேதான் அடிப்படை சரியானதாக இருக்கவேண்டும். தவ்வப்போது மாற்ற முடையதாக இருக்கவேண்டும். சட்டம் கடினமானதாக இருந்தால் ஒரு இலாகாவோ அல்லது ஒரு அரசாங்கமோ தனது திறமையிலே ஒளிந்து கொள்ள முடிகிறது; மனிதாபிமானத்தையுமறந்த செயல்களைப் புரியவும் முடிகிறது. இறுதியில் சட்டத்தின் துணையால் தவறுகளை மூடி மறைத்துக் கொள்ளவும் முடிகிறது. ஆனால் இது எங்கும் அதிக நாட்கள் நிலைத்திருக்க முடியாது—நிலைத்திருக்க விடக்கூடாது. முறையாகவும், துரிதமாகவும்—நேர்மையாகவும் செய்யும் எதுவும் இந்த அவல நிலைகளை மாற்றியமைக்கும். எனவேதான் அரசியலாரை மிகவும் பணிவன்போடு நமக்கு வந்து வாய்த்த சட்டதிட்டங்களிலே படிந்து கிடக்கும் கோளாறுகளை நீக்க நாம் பணிவன்புடன் அழைக்கிறோம். அதிலும் இது விஷயத்திலே அரசாங்கம் துரிதமான நடவடிக்கை எடுத்தாலொழிய வெற்றி கிடைக்காது. காலதாமதம் தோல்வியையும் உண்டாக்கும் வல்லமைபடைத்தது என்பதை அது மறந்துவிடக்கூடாது.

மேலும் சட்டங்கள் மாறுவதால் தீமைவிளைவதில்லை. பழைய சட்டங்களும் உதவாத விதிமுறைகளும் மாறித்தானாக வேண்டும். புதியவற்றிற்கு இடமளித்து பழமை தடம்புரண்டு ஓடவேண்டியதுதான் சரி. இதுதான் காலவளர்ச்சி நமக்கறிவிக்கும் உண்மையாகும். ஒரே ஒரு நல்ல கொள்கை உலகை ஆளட்டும் அல்லது அதனைப் பாழ்படுத்தாமலாகிலுமிருக்கட்டும்.

ஆங்கிலப் பெரும்புலவரொருவர்—டெனிஸன் என்ற அழகான பெயருடையார்—'பழையன—புதியன—பற்றி வாதாடும்போது புதுமைக்கு இட

மளித்து பழமை போகட்டும்—ஒரு நல்ல பழக்கம்—அல்லது கொள்கையால் உலகம் வாழாமலிருக்கட்டும்—!' என்று தனது பாத்திரங்களின் வாயிலாக அவர் உலகிற்கு அறிவிக்கிறார். ஆர்தர் மன்னனைச் சுற்றியிருந்த வீரர் வரிசைக்களிக்கும் அந்தாலுபதேசம், இந்த வால்யூம் மாற்றம் விரும்பாதவர்களுக்கும் நாம் சொல்ல விரும்புகிறோம். உதாரணம் உயர்ந்ததுதான். ஆனால் அதுதான் வழிகாட்டியாகட்டுமே. அதனால் பழையன போகட்டுமே புதியன மலரட்டுமே சட்டங்கள் மாறட்டுமே, தபால் இலாக்காவின் ஊழியச் சமுதாயம் பெருமிதத்துடன் வாழட்டுமே ... ..அதற்காக பாடுபட முன்வாருங்கள் உதவி செய்யுங்கள் என்றுதான் அவர்களுக்கு நாம் கூறவிரும்புகிறோம்!

இத்தகையவர்களுக்குத் தற்போதுள்ள P & T வால்யூமகளில் காணக்கிடக்கும்—அல்லது அது அளிக்கும்—நீதியைப்பற்றி இரண்டொரு விஷயங்களை நேரிடையாக எடுத்துக்காட்டுவதன் மூலமாகவாகிலும் ஒரு தெளிவையாகிலும் அவர்களிடையே உண்டாக்கலாமென்று கருதுகிறோம். சமத்துவமற்ற நீதியை அது தருகிறது என்று நாம் சொன்னபோது சொல்லப்பட்ட நிர்வாகத்தினர் அந்த சட்டகதொகுப்பு அளிக்கும் நீதியைக் கொஞ்சம் அலசிப்பார்க்கட்டும். நிர்வாகம் அதன் சிப்பந்திகளுக்கு வைத்திய வசதியை அளிக்கிறது. ஆனால் அதிலே எவ்வளவு ஏற்றதாழ்வுகள் தெரியுமா? ஒரே இலாகாவின் சிப்பந்திகளுக்கிடையே காணும் வகுப்புப் பிரிவு அவர்களை எவ்வளவு தாழ்த்துவதுடன் கஷ்டத்திற்குமுள்ளாக்குகிறது தெரியுமா...? குறைந்த சம்பளமும், நலிந்த வாழ்க்கைத் தரமும் பெற்றுள்ள நான்காம் வகுப்புச் சிப்பந்திகளுக்கு அவர்களின் நிலையையொட்டி அதிக சம்பளமும் வைத்திய வசதியும் தரவேண்டியது முறையாக இருக்க, அவர்களின் வயிற்றிலேதான் மண்ணள்ளிப்போடுகிறது நிர்வாகம். அதைத்தாங்கிப்பிடிக்கிறது 'விதிமுறையின்' தொகுப்புக்கள்—ஆனால் அதே நேரத்தில் அவர்களைவிட அதிக சம்பளம் பெறுபவர்கள், வாழ்க்கைத்தரத்தால் உயர்ந்தவர்கள் இத்தகைய வைத்திய வசதிகளைப் பெறுவதோடல்லாமல், தேவைக்கேற்ற சம்பளமும், பெறுகின்றனர். இந்த பாரபட்சத்தை 'இதோ' சட்டத் தொகுப்புக்கள்' ஆதரிக்கின்றன—அவைகளுக்கு உதவவும்செய்கின்றன. எனவேதான் இத்தகைய பாரபட்சமுள்ள வால்யூம்கள் மாற்றியமைக்கப்பட வேண்டுமென்று சொல்லுகிறோம், வைத்திய வசதிகளைப் பொருத்தமட்டில் இந்தப் பெருங்குறைபாடுகளை நாம் பல காலமாகவே சொல்லிக்கொண்டு வந்திருக்கிறோம். என்? கிளர்ச்சியும் செய்திருக்கிறோம்—நமது பத்தாண்டுகளுக்கும் மேலான இந்த பெருமுயற்சிக்கு அரசாங்கம் வெகுநாட்கள் வரையில் செவிசாய்த்ததாகவே தெரியவில்லை. ஆனால் கடந்த 2 ஆண்டுகளுக்கு முன்னாலேயிருந்து போக்குவரத்து இலாகாவின் பொறுப்புள்ள மந்திரியார், தனது பார்லிமெண்ட் சகாக்களுக்கு, இந்த விஷயம் இன்னும் அரசாங்கத்தின் பரிசீலனையிலிருந்து வருகிறது?—என்றே பதில் சொல்லிக்கொண்டு வருகிறார். ஆனால் தகுந்த வட்டாரங்களிலேயிருந்து நமக்குக்கிடைக்கும் செய்தி அதுவல்ல. இந்த வைத்திய வசதியளிக்கும் பிரச்சனையிலே இந்திய சுகாதார மந்திரியார் கருணைகொண்டு உதவிசெய்யத் தயாராக இருந்தாலும், இந்த தபால் தந்தி இலாகாவின் வால்யூம்களின் விதிமுறைகள்தான் அவர்களைத் தடுப்பதாகத் தெரிகிறது. இந்த விதிமுறைகள் நான்காம வகுப்புச் சிப்பந்திகளுக்கு அளிக்கும் வைத்திய வசதியைப் பொறுத்தமட்டில் சட்டபூர்வமாக அனுமதிப்பதில்லை. எனவேதான் இவ்வளவு காலதாமத மேற்படுகிறது. இந்த சிற விஷயத்திலும இவர்களுக்கு ஏதாவது ஓர் உதவியளித்தால், முதலில் வால்யூம்களின் அடிப்படைகளையே மாற்றியோ——திருத்தியோ அமைத்தாக வேண்டும். ஆனால் அரசாங்கத்தைப்பொறுத்தமட்டில் இந்தப் பெரும்பணியில் அவர்கள் ஈடுபட விரும்பு முன்வரார் என்றே தெரிகிறது. ஏனென்றால், இதில் காலைவைத்துவிட்டால், அடிப்படையிலேயிருந்து சீர்திருத்தம் காணுவது என்பது தங்கள் நிலைமைக்கு ஆபத்தும—கஷ்டமும உண்டாக்கும் என்பதோடு மிக கடினமான வேலையாகவும் அது முடியும் என்ற பயமும் அவர்களைப்பிடித்தாட்டுவதாகவும் தெரிகிறது.

ஆனால், இதுவல்ல முறை. வெள்ளையர்கள் நம்மை ஆண்டபோது சோஷலிசத்தைச் சொல் முறையிலே பெற்றுவிட்டதாகப் பெருமைபட்டுக் கொண்டார்கள். ஆனால் இன்று நம்மவர்கள் ஆளும்போதோ அதனை எட்டளவிலேயும பெற்றுள்ளதாகப் பெருமிதம் கொள்கிறார்கள். ஆனால் மக்களோ இந்த இரு பெருமைக்குரலெழுப்பிகளையும் கண்டித்துத்தங்களின் உரிமைக்குரலை எழுப்பிக்கொண்டிருக்கிறார்கள், எனவேதான் நல்ல சமயத்திலே சேர்மையானதைச் செய்ய வேண்டுமென்று அரசியலாரை வற்புறுத்துகிறோம். மன்றாடிக் கேட்டுக்கொள்ளுகிறோம். சோஷியலிசப் பிரச்சாரத் தொழிலிலும, பழக்கவழக்கத்திலும் அவர்கள் மிகுதியான மாறுதல்களைச் செய்து மக்களை குறிப்பாக தொழிலுலகத்தினரை வாழ்விக்க இதுதான் அவர்களுக்குக் கிடைத்த நல்ல சமயமென்று அன்பாகவும்—சிறப்பாகவும் தெரிவித்துக்கொள்கிறோம். ஆனால், இந்த அன்புரையை ஏற்பதில்தான் அவர்களின் எதிர்காலம் ஒளிவிடும் என்பதை அவர்களறியாமலிருக்க மாட்டார்களென்றே நம்புகிறோம்!!

# பாராளு மன்றத்திலே நமது குரல்!

## தலைவர் வீ. வீராசாமி பி.ஏ., அவர்களின் முழக்கம்!

---

நமது அன்பிற்கும், நன்மதிப்பிற்கும் பாத்திரமான தலைவர் வீராசாமியவர்கள் பாராளு மன்றத்திலே நமது குறைபாடுகளைப்பற்றி சமீபத்திலே ஆற்றிய விளக்கவுரையின் சுருக்கம் கீழே தரப்படுகிறது.

### திரு வீ. வீராசாமியவர்கள் (M. P.) (மாயூரம் தொகுதி.)

இனி அடுத்து நான் தபால் இலாகாவின் குறைபாடுகளைப் பற்றியும், தேவைகளைப் பத்றியும் சில பல எடுத்துச் சொல்ல ஆசைப்படுகிறேன். பட்ஜெட் விவாதத்தின்போது, போக்குவரத்து இலாகாவின் மந்திரியாரவர்கள் தபால் தொழிலாளர்களின் வேலையின் திருப்திகரத்தைப்பற்றியும் எடுத்துரைத்தார்கள். 'தபால் தொழிலாளர்கள் அவர்களின் வேலைகளைச் செவ்வனே செய்து வருகிறார்கள். அவர்கள் இனியும் அங்ஙனமே தொடர்ந்து செய்து வருவார்கள் என்று நான் நம்புகிறேன்' என்று கனம் மந்திரியாரவர்கள் தெரிவித்தார்கள். இந்த நேரத்திலே கனம் மந்திரியார் அவர்களுக்கும் தபால் இலாகாவிற்கும் நானொன்றுகூற ஆவல்படுகிறேன். தபால் தொழிலாளர் அவர்களின் தொழில் கடமையைச் செவ்வனே செய்து வருகிறார்கள், அதைபோலவே இலாகாவும்—அரசாங்கமும் அவர்கள் விஷயத்தில் சம்பந்தபட்ட பணிகளையும்—கடமைகளையும் நன்கு செய்ய முன் வரவேண்டும்! மிக குறைந்த அளவில் சம்பளம் வாங்கும் சிப்பந்திகளின் விஷயத்தில் அவர்களும் சிறிது கருணை காட்ட முன்வரவேண்டும்.

அவர்கள் சம்பந்தபட்ட வரையில் அவர்களின் சம்பள விகிதத்தில் ஏராளமான பாரபட்சம் தென்படுவது மிகவும் வருந்ததக்கதாகும். அவர்களின் குறைந்தபட்ச சம்பளத்திற்கும், அதிகபட்ச சம்பளத்திற்கு மிடையே வருந்ததக்க வித்தியாசங்கள் நிறைந்து கிடைக்கின்றன. இந்த காலத்தில் பியூன்கள் சம்பளம் கூட நான்காம் வகுப்புச் சிப்பந்திகளென்றோ—அல்லது நான்காம் வகுப்பு ஆபீசர்களென்றோ கூப்பிடப்படும்ஒருகௌரவநிலையிருந்து வருகிறது. ஆனால் இந்த கௌரவ முறையால் மட்டும், மற்ற பிரச்சனைகள் தீர்ந்துவிட்டதாகவோ, திருப்திகரமாக இருப்பதாகவோ ஆகிவிடாது. இப்படி அன்பாக அழைக்கப்படுவதால் மட்டுமே அவர்களின் 'ஜேபி' நிறைந்துவிடாது. அதில் பணம் நிரம்பி வழியாது. ஆனால் பணத்தால் கிறப்புவதும்—அவர்களுக்கு திருப்தியும் நல்வாழ்வும் அளிப்பதும் கனம் மந்திரியாரவர்களின் கையில்தானிருக்கிறது. இந்த பொறுப்பான பணியை அவர் தான் செய்யவேண்டும். இந்தப் பணியை அவர் செய்தால்தான் ஏழை தொழிலாளர்களின் 'ஜேபிகள்' நிரம்புவதோடு வயிறும் நிறம்பும். அதன் பயனாய் அவர்களுக்குள்ள உணர்ச்சியும், ஊக்கமும் பெருகும். பணிகள் மேலும் சீர்பெறும். ஒழுங்கு நிலையையும் அடையும். இதனால் இலாகாவின் தரமும் பெருமையும் மேன்மேலும் சிறக்கும்—உயரும்! தபால் தொழிலாளர்களும் மகிழ்சசிகரமாகவும் திருப்திகரமாகவு மிருப்பார்கள். எனவே தான் நானும் இதையொட்டிய சில முக்கியப் பிரச்சனைகளை மந்திரியாருக்கும்—உங்களின் அன்புப் பார்வைக்கும் வைக்கவும்—அவற்றை ஒரு சிறிது விளக்கிப் பேசவும் ஆசைப்படுகிறேன்.

முதலாவதாக, தபால் சிப்பந்திகளுக்கென இருந்த P. T. O. சலுகையை அரசியலார் ஒரு ஆண்டுக்கு மாத்திரம் தற்காலிகமாக அனுமதித்துவிட்டுமீண்டும் அதனை நிறுத்தி விட்டார்கள். ஆனால் இதுபற்றி கேட்கப்படும்போது மாத்திரம் இதனை திரும்பவும் அமுல் நடத்தி அந்த சலுகைகளைச் சிப்பந்திகளுக்குத் தரப்படுமென்று சொல்லப்பட்டது. ஆனால் இன்றுவரை அதுவிஷயம் கவனிக்கப்படாமலேயே இருந்து வருகிறது. இந்தப் பிரச்னையில் மத்திய சம்பளக் கமிஷனும் நல்ல அளவில் சிபார்சு செய்து மத்திய அரசாங்க சிபபந்திகள் அனைவருக்கும், தேசம் பூராவும் சுற்றுப்பிரயாணம் செய்து நல்லது கெட்டதுகளைத் தெரிந்து கொள்ளும் வாய்ப்பினை அரசாங்கம் ஏற்படுத்தித்தர வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தது. ஆனால் இன்றோ அவர்களுக்கென கொடுக்கப்பட்ட அந்த சலுகையும் பறிக்கப்பட்டுக் கிடக்கிறது. அதனைத் திரும்பிக் கொண்டுவர வழியோ—வாய்ப்போ உண்டாவதாகவும் தெரியவில்லை. எனவே நான் கனம் மந்திரியாரவர்களைக் கேட்டுக் கொள்வதெல்லாம் இந்த P. T. O. சலுகைகளை தயவுசெய்து மீண்டும் அமுலுக்குக் கொண்டுவாருங்கள். அதனால் மத்திய அரசாங்க ஊழியர்கள்—குறிப்பாக தபால் இலாகாவின் ஊழியர்கள் அந்தச் சலுகையைப் பயன்படுத்தித் தங்களின் லீவு நாட்களையாவது நாட்டைச் சுற்றிப் பார்ப்பதன் மூலமாகவாகிலும் கொஞ்சம் நிம்மதியாகக் கழிக்கட்டும் என்பதுதான். ரயில்வேக்களும்—தபால் இலாகாவும் ஏறதாழ ஒன்றுக்கொன்று தொடர்புடையதாகும். ஆனால் இந்த P. T. O. சலுகை ரயில்வே சிப்பந்திகளுக்கிருந்து, தபால் சிப்பந்திகளுக் கில்லாதிருப்பதுதான் வருந்தத் தக்கதாக இருக்கிறது.

எனவே, இது விஷயத்தில் ஆவன செய்ய வேண்டு கின்றேன்.

என்னுடைய அடுத்த பிரச்சனை சிப்பந்திகளின் குடும்ப அலவன்ஸைப் பற்றியதாகும். கடந்த 1952ல், நானிங்கு பேசியபோது, இங்குள்ள பிரான்ஸ் அரசாங்கத்தினால், சிப்பந்திகளின் குடும்பங்களுக்கு 'குழந்தைகள் அலவன்ஸ்' என்ற பேரால் ஒரு குறிப்பிட்ட தொகையை ஒரு அலவன்ஸாக வழங்கி வந்தார்களென்று குறிப்பிட்டிருந்தேன். இன்றைய நிலையில் சிப்பந்திகளின் அடிப்படை சம்பளங்களை உயர்த்த முடியாத நிலைமையில் அரசாங்க மிருந்தால், குறைந்தபட்சம் சிப்பந்திகளின் குடும்பங்களுக்கு—அவர்களின் 'குழந்தைகள் அலவன்ஸ்' என்ற பேராலாகிலும் ஏதாவது ஒரு குறிப்பிட்ட தொகையை சம்பளத்துடன் சேர்த்துத் தந்தாகிலும் உதவ முன்வரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன். அரசாங்க சிப்பந்திகளின் குழந்தைகளைப் பொறுத்த வரையில் அவர்களாகிலும் நல்ல முறையில் வளர்க்கப்பட்டாகவேண்டும் ஏனென்றால் அவர்கள்தான் இந்தியாவின் எதிர்காலப் பிரஜைகள். அவர்கள் ஒழுங்காகவும், மகிழ்ச்சிகரமாகவும் வளர்க்கப்பட வேண்டியவர்களாவார்கள். அவர்கள்தான் இந்தியாவின் எதிர்கால மந்திரிமார்கள் — அரசியல்வாதிகள் — அறிஞர்கள் — மேதைகள் எல்லாம். எனவே அவர்கள் நன்கு போஷிக்கப்பட்டு வளர்க்கப்படவேண்டும். அவர்களுக்கு உடையும்—உணவும் அளிப்பதோடு சிறப்பான கல்வியறிவையும் அவர்களுக்கு அரசாங்க மளிக்க வேண்டும்—அது அவர்களின் கடமையாகும்......' இதைப்போன்ற நேர்மையான சலுகைகளைக்கூட நாம் அவர்களுக்குக் கொடுக்காவிட்டால் எப்படி இந்தியாவை எதிர்காலத்திய சுபீட்சநாடாக நாம் எதிர்பார்க்க முடியும்?

அடுத்து நான் சிப்பந்திகளின் வீட்டு வாடகை அலவன்ஸைப்பற்றி சில பல எடுத்துக் சொல்ல ஆசை படுகிறேன். சிப்பந்திகளுக்குக் கொடுக்கப்பட்ட வீட்டு வாடகை அலவன்ஸ் இப்போது 'கட்கில் கமிட்டி' சிபார்சின் மூலம்—அதாவது பஞ்சப்படியின் ஒரு பகுதி சம்பளத்துடன் சேர்க்கபட வேண்டும் என்ற சிபாரிசின் மூலம்—குறைக்கப்பட்டுவிட்டது. இது முறையல்ல. எனவே இவ்விஷயத்தில் அரசாங்கம் தலையிட்டு ஆவன செய்யவேண்டும்.

இனி மற்றொரு முக்கியமான பிரச்சனையையும் கனம் மந்திரியாரின் கவனத்திற்கு நான் கொண்டு வர ஆசை படுகிறேன். அதாவது 55-வயதிற்கு மேற்பட்ட சிப்பந்திகள் தங்களின் வேலைகாலத்தை நீடிக்க மனுச்செய்துகொள்ளும்போது அவர்கள் வேலையிலிருந்து இனியும் தொடர்ந்து பணியாற்றத் தகுயுடையவர்களா என்பதை நிர்ணயிக்க அவர்களை வைத்திய பரிசோதனைக்கு அனுப்பிவைக்கிறார்கள். இது மிகவும் கவலைக்கிடமான சிலதகவல்களையே நமக்குத் தருவதாக இருக்கிறது. சமீபத்தில் நீங்கள் செய்தித்தாள்களில் ஒரு சேதி யொன்றைப் படித்திருப்பீர்களென்றே நம்புகிறேன்; ,கொட்டாரகாரா' என்னுமிடத்திலே சப் போஸ்ட்மாஸ்டராக வேலை பார்த்துவந்த ஒரு நண்பர் 'பொன்னுட் விட்டில்'—என்பவர் ஆஸ்பத்திரிக்கு வைத்திய பரிசோதனைக் கனுப்பப்பட்ட அன்றே இறந்துவிட்டாராம். காரணம்...என்னவாக இருக்க முடியும்?... என்னவாக இருக்கவேண்டும்—55-வயதிலும், 60-வயதிலும் அவர்கள் ஏன் வைத்திய பரீட்சைக்கு திடீரென்று அனுப்பப்படவேண்டும்—அன்றுவரையில் அவர்கள் ஒழுங்காகத்தானே வேலைபார்த்து வந்திருக்கிறார்கள். அரசாங்கத்திற்கு இஷ்டமிருந்தால் அவர்களின் வேலைகாலத்தை நீடிக்கவோ—அல்லது அத்துடன் துண்டித்துக்கொள்ளவோ அனுமதி தரலாம். அதைவிடுத்து நீங்கள் வைத்தியப் பரீட்சைக்குப் போய்தான் வரவேண்டுமென்பது என்ன நியாயம்—? அதில் என்ன அர்த்தமிருக்க முடியும் ...? என்னைப் பொருத்தமட்டில் அதை ஓர் அர்த்தமற்றதும், அநாகரீகமானதுமான செயல்என்றேகருதுகிறேன். ஒரு மனிதனை அதிலும் வயது நிரம்பினவனை—ஒழுங்காகவும், திடகாத்திரமான உடலுடனும் வேலை செய்கிறவனை— திடீரென்று வைத்திய சோதனைக்குப் போய்வா என்று சொன்னால் அவர் எவ்வளவு மனமுடைந்தவராகிவிடுவார் என்று நாம் சிந்தித்துப் பார்க்க வேணடும்.

இந்த வேதனையை நாம் உணரவேண்டும். இந்த நேரத்திலேஉதாரணத்திற்காக நானொன்று கேட்க விரும்புகிறேன், கனம் மந்திரியாரவர்களை நாம் இப்பொழுது வைத்திய பரீட்சைக்கு அனுப்ப முடியுமா? அவரால் வைத்திய பரீட்சைக்கு போக கூடுமா? நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். இன்று நாட்டிலே மிகவும் பொருப்பையும், சங்கடத்தையும், ஏற்றுக்கொண்டிருக்கிற மந்திரிமார்கள்—கவர்னர்கள் முதலியோர், 55-க்கும், 65-க்கும் ஏன் 70-க்கு மிடையிலேகூட சஞ்சரித்துக்கொண்டிருப்பவர்கள்தானே—? இவர்கள் எல்லாம் இனியும் தொடர்ந்து வேலை செய்யவேண்டுமானால், போய் வாருங்கள் நீங்களும் ஒரு வைத்திய பரீட்சைக்கு என்று சொன்னால் எவ்வளவு நேர்மையற்றதாகவும் அநாகரிகமானதாகவும் தோன்றுமென்று எண்ணிப் பார்க்கவேணடும். அப்போதுதான் இந்த தொழிலுலகத்திலிடையே திருப்தியும் நிலவ முடியும். அதனைச் செய்ய அரசியலார் முன்வருவார்களென்று நம்புகிறேன்.

# அகில இந்தியா தபால் தொழிலாளர் யூனியன்

# போஸ்ட்மென் & IV வது வகுப்பு

No. A. C. 10 டெல்லி 6.
12—4—56.

மேற்கண்ட டைரக்டர் ஜெனரலின் கடிதம் எல்லாமாவட்ட,

வட்ட செயலாளர்களுக்கும் அனுப்பப்பட்டிருக்கிறது. இக்கடிதம் சென்னை கிளைக்கு கனம் துணை மந்திரியாரவர்கள் அளித்த பேட்டியை யொட்டி அங்கு நிகழ்ந்த பேச்சுவார்த்தைகளைத் தொகுத்து டைரக்டர் ஜெனரல் அவர்களால் அனுப்பப்பட்டதாகும்.

(Sd) M. P. சலிவன்,
J. துணைப் பொதுச்செயலாளர்.

## டைரக்டர் ஜெனரலின் கடிதமும், பேட்டியின் விவரமும்

யூனியன் 25/56 பொதுச்செயலாளர்

டெல்லி 15—4—56 டெல்லி,

### பொருள்: பேட்டி விவரங்கள்

உங்களின் சென்னைக் கிளைச்சங்கத்திற்கு கனம் துணை மந்திரியாரவர்களால் கடந்த 15—1—56ந் தேதி அளிக்கப்பட்ட பேட்டியை பொட்டி அதன் முழுவிவரங்களும் பேச்சுவார்த்தை களடங்கிய குறிப்பு நகலொன்றை உங்களின் அறிவிப்புக்காக அனுப்பிவைக்கும்படி கோரப்பட்டிருக்கிறேன்.

இக்கடிதம் சேர்ந்த விவரத்திற்கு அறிவிக்கவும்.

## பேட்டி விவரம்

15—1—56-ல் இந்திய போக்குவரத்து இலாகாவின் மந்திரியார் அவர்களால் சென்னை தபால் தொழிலாளர் சங்கத்திற்களிக்கப்பட்ட பேட்டியின் விவரம் வருமாறு :

I போஸ்ட்மென், சார்ட்டிங் போஸ்ட் மென், நான்காம் வகுப்பு சிப்பந்திகளின் சம்பள விகிதங்களை மாற்றி யமைப்பது பற்றி:

மேற்கண்ட தொழில் பிரிவினரின் சம்பள விகிதங்கள் மிகவும் குறைவானது, என்றும் வாழ்க்கைக்குப் போகாதது என்றும் யூனியன் பிரதிநிதிகள் விளக்கினர். அவர்களின் அதிகபட்ச சம்பள விகிதத்தை இன்னும் கொஞ்சம் தகுந்த அளவில் மாற்றியமைத்தால், அந்த மாறுதலினால் தாங்கள் வேலையிலிருந்து ஓய்வு பெறும் போது, மூன்றாம் வகுப்புச் சிப்பந்திகளைப் போல, தங்களின் குறைந்தபட்ச சம்பளத் தொகையையாவது பென்ஷனாகப் பெற முடியும். எனவே அதனைத் தகுந்த அளவில் மாற்றி யமைக்க வேண்டுமென்றும் கோரப்பட்டது.

இந்த பிரச்சனை பற்றியோர் முடிவுகாண கொஞ்சகாலம் பொறுத்திருக்க வேண்டும் என்று துணை மந்திரியாரால் தெரிவிக்கப்பட்டது.

II நான்காம் வகுப்புச் சிப்பந்திகளின் குடும்பங்களுக்கு வைத்திய சலுகை யளிப்பது பற்றியும்— இது விஷயத்தில் ஏற்கனவே கொடுக்கப்பட்ட சகாயத் தொகையை மீண்டும சம்பளத்தில் பிடித்துக் கொண்டு வருவது பற்றியும்:

யூனியன் பிரதிநிதிகளால், மேற்படி பிரச்சனை பற்றி எடுத்துரைக்கப்பட்டது. அரசாங்கத்தின் உத்திரவு (இந்த நான்காம் வகுப்பு சிப்பந்திகளின் குடும்பங்களுக்கும் வைத்திய வசதி யளிப்பது பற்றி) இன்னும் இலாகாவிற்குக் கிடைக்கப் பெறாமையால், அவர்களுக்கு ஏற்கனவே வைத்திய நஷ்டஈட்டுத் தொகையென அளிக்கப்பட்டதொகையானது மீண்டும் அவர்களின் சம்பளத்தினின்றும் பிடிக்கப் பட்டு வருகின்றதென்றும் அது நிறுத்தப்பட வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது.

இந்த பிரச்சனை இன்னும் அரசாங்கத்தின் பரிசீலனையிலிருந்து வருகிறது.

III ஒழுங்காகவும் இலாகா பூர்வமாக முள்ள தபாலாபீசுகளை — பிரத்தியோக இலாகாவின் (E. D) யின் கீழ் கொண்டு வருவது பற்றி:

சென்னை மாவட்டத்தின் இலாகா பூர்வமான தபாலாபீசுகளை பிரத்தியோக இலாக்காவாக ஆக்குவதன் மூலம் கிராம தபால்காரர், நான்காம் வகுப்

புச் சிப்பந்திகளின் வாழ்க்கையும் — வேலையும், பாதிக்க வைக்கும் பணி பெருத்த அளவில் நடந்து வருகிற தென்றும், இதன் எதிரொலியால் இலாகா பூர்வமான சிப்பந்திகளிடையே குழப்ப மேற்படுகிறதென்றும், அவர்கள் அவசியமான வேலைமாற்றதலுக்கு ஆளாவதோடு அவர்களை விட ஜூனியர்கள் சில நேரங்களில் அப்படி வேலைமாற்றப் பட்ட இடங்களிலே இருந்தால் அவர்களின் பிரமோஷன் வாய்ப்பு பெரிதும் இதனால் பாதிக்கப் படுகிறதென்றும், அவர்கள் முழுக்க முழுக்க அந்த வாய்ப்பைஎதிர்பார்க்க முடியாததாகி வருகிறதென்றும் யூனியன் பிரதிநிதிகளால் எடுத்துச் சொல்லப்பட்டது.

இலாகாபூர்வமான தபாலாபீசுகளை பிரத்தியேக இலாகாவின் கீழ் கொண்டு வரும் பழக்கமானது இலாக்காவைப் பொருத்த மட்டில், அவ்வந்த இடத்தின் தேவையைப் பொறுத்துதான் செய்து வரப்படுகிறது. இலாகா பூர்வமானதாக்க் போதிய ஆதாரங்களும் தேவைகளுமில்லாத நேரத்தில்தான் இப்படிபபட்ட முறை கையாளப் படுகிறது என்று உறுதி கூறப்படுகிறது.

கிளார்க்குகளாக உயர்தரப்பட்ட தபால்காரர்களை பற்றி:

VI. ஊர்ஜிதத் தேர்வில் தேறாத காரணத்தால், கடந்த 9-ஆண்டுகளுக்கும் மேலாக ஒருவித குற்றச் சாட்டும், குறைபாடுமின்றி கிளார்க்குகளாக வேலை பார்த்துவரும் தபால்காரர்கள் மேலும் பழையபடியே தபால்காரர்களாக வேலையின் கிரேடிலே யிருந்து தாழ்த்தப்படுவது நிறுத்தப்படவேண்டுமென்றும், அவர்களின் ஊழியத்தின் தாரதம்மியத்தை முன்வைத்து அவர்களுக்கு இதுவிஷயத்தில் விதிவிலக்களிக்கப் படவேண்டுமென்றும்யூனியன் பிரதிநிதிகளால் கேட்டுக்கொள்ளப் பட்டது.

இது விஷயத்தில் இத்தகைய சிப்பந்திகளுக்கு மேலு மொருவாய்ப்பு தரப்படும். அதிலும் அவர்கள் தேறாதுபோனால் — அரசாங்கத்தின் இது விஷயத்திய முடிவை மாற்றிக்கொள்ள முடியாது. அதாவது விதிவிலக்களிக்கும் பரச்சனை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

V. கிளார்க்குகள் பரீட்சைக்கென்று வழங்கப் பட்டு, சிப்பந்திகளால் விடையிறுக்கப்பட்ட பரீட்சையின் பதில் தாள்களை தாராளமாகத் திருத்தி மதிப்பிடுவதுபற்றி:

சமீபத்தில் நடந்த கிளார்க்குகளின் ஊர்ஜிதத் தேர்வின் வினாத்தாள்கள் மிகவும் கடினமானதாகருந்தனவென்றும், அதனால் அதனை மதிப்பிடும் போது கொஞ்சம் தாராள மனப்பான்மை காட்ட அரசாங்கம் உதவவேண்டுமென்றும் யூனியன் பிரதிநிதிகளால் கேட்கப்பட்டது.

இந்த பரீட்சையின் தாரதம்மியமும்—தேவையான அளவில் நிர்ணயிக்கப்பட்ட அதன் அம்சத் தகுதியும், இனியும் குறைந்த அளவில் தாழ்த்தப் படுவதற்கில்லை என்று துணை மந்திரியாரால் பதிலளிக்கப்பட்டது.

VI. யூனிபாரங்கள் வழங்குவதுபற்றி:

யூனிபாரங்கள் வழங்குவதைபற்றி கேட்கப்பட்ட போது சீக்கிரமே அவைகள் சிப்பந்திகளுக்கு வழங்கப்படுமென்று பதில் சொல்லப்பட்டது.

VII. சிப்பந்திகளுக்கு குடைகள் வழங்குவது பற்றி;

உஷ்ணப் பெருக்கத்தையும், மழையின் மிகுதியையும் ஒட்டிமட்டுமே குடை கொடுக்கப்படும் பழக்கத்தை கைவிட்டு எந்த விதமான உஷ்ணத்திலும், எந்தவிதமான மழையிலும் உபயோகபடும்படி, வெளியில் சென்று பணியாற்றும் அவசியமுள்ள அனைவருக்கும் குடைகள் வழங்கப்படவேண்டுமென்று யூனியன் பிரதிநிதிகளால் கேட்கப்பட்டது. இதுவிஷயம் பரிசீலிக்கப்படும் என்று பதிலளிக்கப்பட்டது.

VIII தபால்காரர் பிரிவிற்குநேரிடையாக ஆட்களை எடுப்பதுபற்றி ;

வெளியிலிருந்து தபால்காரர் பிரிவுகளில் பணியாற்ற ஆட்களை நேரிடையாக எடுக்கும்முறையைக் கைவிட்டு இலாக்காவில் நான்காம்தரம் பிரிவுகளில் தகுதியுள்ளவர்களுக்கு பிரமோஷன் அளிக்க உதவி செய்யவேண்டுமென்று கேட்கப்பட்டது.

வெளியாட்களை வேலைக்கு ஏற்றுக்கொள்வதிலும் சில விகிதாச்சாரங்கள் ஒதுக்கப்பட வேண்டியிருக்கிறதென்று துணைமந்திரியார் தெரிவித்தார்.

IX. S.S.L.C. பாஸ்செய்தவர்கள், தபால்காரர்களின் பிரிவிற்கும் 4ம் வகுப்புச் சிப்பந்திகளின் பிரிவிற்கும் நேரிடையாகவே அமர்த்தப்படுவதை நிறுத்துவது பற்றி ;

S.S.L.Cபடித்துபாஸ்செய்தவர்களை நேரிடையாக மேற்படி பிரிவில் சிப்பந்தியாக ஏற்றுக் கொள்ளுவதால், அந்த ஸ்தானத்திற்குத் தகுதியானவர்களும், போதுமான அனுபவம் பெற்றவர்களும் பிரமோஷன் பெற வசதியில்லாமல் பாதிக்கப்படுகின்றனர்

னென்றும், ஆகவே இம்முறைகையாளப் படக்கூடா தென்றும் கோரப்பட்டது.

'இது விஷயத்தில் யூனியனின் யோசனைகள் பரிசீலிக்கப்படும் என்று தெரிவிக்கப்பட்டது.

X எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சின் தலையீடின்றி 'ஆபீஸ் பையன்கள் வேலைக்கும், மற்றும் நான்காம் வகுப்பின் வேலைக்கும் ஆட்களை ஏற்றுக்கொள்ளப்படுவதைப் பற்றி.

இந்தப்பிரச்னை ஏற்கனவே அரசாங்கத்தினிடம் விவாதற்குற்கு எடுத்துக் கொள்ளப்படுகிறது என்று பதிலிறுக்கப்பட்டது.

XI 55 வருஷ சேவைக்குபிறகு கட்டாய வைத்திய தேர்வை இலாகா வற்புறுத்துவதைப்பற்றி.

'இந்தப்பிரச்னை அரசாங்கத்தின் பரிசீலனையிலிருந்து வருகிறது! இவ்வாறு துணைமந்திரியார் கூறி முடித்தார்.

---

# பெடரல் கவுன்சிலும் - அதுசெய்த முடிவுகளும்!

## சென்னை துணைச் செயலாளர் திரு எத்திராஜுலு நாயுடு அவர்களின் விளக்கமும் கருத்தும்

---

குறிப்பு:

*நடந்த ஏப்பிரல் கவுன்சிலின் செயல் முறைகளைப்பற்றியும், அது நிர்ணயித்த சில முடிவுகளைபற்றியும் நமது சென்னை மாவட்ட துணைப் பொதுச் செயலாளர்* **திரு. எத்திராஜுலு நாயுடு** *அவர்கள் தங்களின் கருத்தை கீழே தெளிவு படுத்தியுள்ளா. இதை போலவே நமது பொது செயலாளர்* **திரு. P. M. கிருஷ்ணன்** *அவர்களும் தங்கள் கருத்துக்களை. தெளிவுபடுத்தியிருப்பது நண்பர்களுக்கு கவனமிருக்கலாம்.*

(ஆசிரியர்)

சமீபத்தில் நடைபெற்ற பெடரல் கவுன்சில் கூட்டத்தில், தபால்தொழிலாளர்களின் அவசரமானதும், அவசியமானதுமான பிரச்சனைகளைப்பற்றி எந்த ஒரு கவனமும் செலுத்தப்படவில்லை என்பதைக் காண மிக்க வேதனையாகவும், வருத்தமாகவுமிருக்கிறது. பெடரல் கூட்டத்தின் நேரமெல்லாம் கொள்கை விளக்கத்திற்கும், சட்டதிட்ட தேர்வுகளுக்கும், அங்கிகாரத்திற்குமே முழுக்க முழுக்க பயன்பட்டிருக்கிறது. இதைச் சொல்வதால் நம்மைபோன்ற தோர் பெரிய சங்கத்தையுடையோர் சட்டதிட்டங்களை வரையரைத்துக்கொள்ள நேரம் ஒதுக்கக்கூடாது என்றோ, அது தேவையில்லையென்றோ—நாம் சொல்வதாக சொல்லிக்கூடாது, அப்படி யாருமே துணிர்தும் சொல்லமாட்டார்கள். ஆனால் இதற்காகவே கூட்டத்தின் ஆறுநாட்களையும் பயன்படுத்திக் கொண்டிருக்க தேவையில்லை. சட்டதிட்டத்திற்கும், கொள்கை விளக்கத்திற்கும் ஆறுநாட்கள் விவாதமெடுத்தது அவ்வளவு தேவையுள்ளதாக நமக்குத் தோன்றவில்லை, இந்த முக்கியமான பிரச்சனையைக் கூட மூன்று நாட்களுக்கு மேல் வைத்துக் கொண்டதானது அவ்வளவு சரியானதாகத் தோன்றவில்லை. நம்மவரின் தேவைகளையொட்டிய எவ்வளவோ முக்கியமானதும், அவசரமானதும், அவசியமான பிரச்சனைகளிருக்கின்றன. அதற்காக, (3) மூன்று நாட்கள் ஒதுக்கியிருந்தால் எவ்வளவோ நன்மையானதும், மகிழ்ச்சிகரமானதுமான முடிவுகளேற்பட்டிருக்குமென்பதே என் கருத்து. ஏனென்றால் நம்முடைய அவசரப் பிரச்சனைகள் அவ்வளவு முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். இதை யாரும் மறுக்க முடியாது. எனவே, இந்த கௌன்சிலில் நானும் ஓர் உறுப்பினன் என்ற முறையில் இந்த செய்கைக்காக பெரிதும் வருந்துகிறேன்.

மேலும் பெடரல் கவுன்சில் கூட்டத்தில் கலந்து கொண்ட உறுப்பினர்கள், ஏறகுறைய எல்லோருமே, தனித்தனியான புரியாத மொழிகளிலேயே பேசிக் கொண்டனர். இது மற்றவருக்குப் பெரிதும் புரியாத புதிராகவே கடைசிவரையில் விளங்கியது. இதனால் ஏற்பட்டதெல்லாம் பெருத்த நஷ்டமேயாகும். கால விரயமும்,—எண்ண விரயமும்தான் இதனால் ஏற்படமுடிந்தது என்றால் மிகையல்ல

அது. எனவே வருங்காலத்திலாவது ஒவ்வொருவர் பேசும் மொழியையும் ஒரு மொழி பெயர்ப்பாளரைக் கொண்டு ஒருவரது மொழியில் மொழிபெயர்த்துக் கொள்ளவும், கூட்டத்தின் முழு நடவடிக்கைகளையும் பேச்சுவிவரங்களையும் கூடுமான அளவுக்கு துண்டு துண்டு இதழ்களில் பிரசுரிக்கவும், ஏற்பாடு செய்யப்பட்டால் நலமாகவும், பயன்தரக்கூடியதாகவுமிருக்கும். இதற்கான வகையில் விரைவில் தகுந்த ஏற்பாடுகள் செய்யப்படுமென்று நம்புகிறேன்.

மிற்சு, நான் வேறு ஒரு செய்தியையும் வெளிப்படையாகத் தெரிவித்துக் கொள்வதற்காக மன்னிக்கக்கோருகிறேன். அது என்னவென்றால், பெடரல் கவுன்சிலர்களுக்குள்ளாகவே குழப்பமான கொள்கைகளும் அபிப்பிராய பேதங்களும் நிலவி வருகிறது. இதைநான் சற்றுவெளிப்படையாகவே கண்டித்து பேசவேண்டியிருப்பதற்காக வருந்துகிறேன். இந்த நிலையில்தான் அன்று அங்கு எத்தப் பிரச்சனையிலும் சாத்தியமான அளவில் முடிவுகாண முடியாமல் காலவிரயம் ஆக நேரிட்டு விட்டது. காரண காரியமில்லாமல், ஒரு சாரார் மற்றொரு சாராரின் அபிப்பிராயங்களையும், தீர்மானங்களையும், அது எவ்வளவுதான் நல்லதாகவும், தேவையானதாகவு மிருந்தாலும், அதனை எதிர்ப்பதும், இதனால் வாதபிரதிவாதங்களெழுவதும்—அதன் பயனாய் காலவிரயம் ஏற்படுவதும் வேதனையாகவே இருந்தது. இந்த குறைபாடுகளையும்—விவாதங்களையும் கட்டுப்படுத்த வேண்டுமானால் பெடரல் கவுன்சிலையே இரண்டு பிரிவாக பிரித்துவிட்டு விடுவதுதான் நலமென எனக்கு தோன்றுகிறது. மூன்றாம்வகுப்புச் சிப்பந்திகளின் நலனுக்காக கவனிக்க ஒரு பிரிவும்— நான்காம் வகுப்புச் சிப்பந்திகளின் நலன்களை கவனிக்க மற்றொரு பிரிவுமாக இரு பிரிவுகளிலிருந்தால் ஓரளவுக்கு இந்த கோஷ்டி மனப்பன்மையும் பிளவு எண்ணமும் மட்டுபடுமென்று நான் கருதுகிறேன். இந்த இருவேறுசாராரும், தங்கள் தங்களின் குணநலன்களைத் தனித்தனியாகவே விவாதித்து ஒரு முடிவுக்கு வரவும் போதிய வாய்ப்புக்களுமிருக்கும். இப்படி அவர்களால் விவாதித்துப் பெறப்பட்ட முடிவுகளை இதைப்போல ஒரு பொதுப்படையான கவுன்சிலில் வைத்து விவாதித்து மேலும் முடிவுகளைக் காணுவதுதான் இந்த சிக்கல் தீர இருக்கும் ஒரே வழியாகும். இந்த நல்ல யோசனையை ஏற்று இத்தகைய வருந்தத்தக்கதும்—ஊறு தேடுவதுமான குழப்ப நிலைகளைப் போக்க பெடரல் கவுன்சில் முன்வருமாவென்பதும் பொறுத்திருந்து பார்க்கவேண்டிய விஷயமாகும். இதற்கேற்ற அளவில் கவுன்சிலின் சட்டதிட்டங்களைத் திருத்தியோ மாற்றியோ அமைத்துக் கொள்வதில் ஒரு நஷ்டமிருக்க முடியாதென்றே நம்புகிறேன்.

இந்த சிக்கலும் குழப்பமும் நிறைந்த நிலையையொட்டி, நான் மேலும் சில சொல்லவே ஆசைப்படுகிறேன். சமீபத்திய பெடரல் கவுன்சில் கூட்டத்தில், நான்காம் வகுப்புச் சிப்பந்திகளின் குறைகளைச் சொல்லவும், அவர்களின் குறைகளைப்பற்றி விவாதிக்கவும் போதிய அவகாசமும், சந்தர்ப்பமும், நான்காம் வகுப்புச் சிப்பந்திகளின் தலைவர்களுக்குத் தரப்படவில்லை. இது மிக மிக வருந்தத் தக்கதும் கண்டிக்கத் தக்கதுமாகும். ஆனால் அதே நேரத்தில் மூன்றாம் வகுப்புச் சிப்பந்திகளின் தலைவர்களுக்கும் தங்களின் குறைபாடுகளைப்பற்றி விவாதிக்கவும் பேசவும், போதிய வாய்ப்புகள் அளிக்கப்பட்டன. இந்த நிலைதான் நான்காம் வகுப்புச் சிப்பந்திகளின் தலைவர்களிடையேயும், உறுப்பினர்களிடையேயும் பெருத்த ஏமாற்றத்தையும், ஆத்திரத்தையும் உண்டு பண்ணிவிட்டது. எனவேதான் அங்கே சலசலப்பு எழ வாய்ப்பிருந்தது. ஆகவே நாம் இந்த பிரசனைகளைப் பொறுத்தமட்டில் மனமாற விரும்புவதெல்லாம், இதுபோன்ற குறைபாடுகளும், அதிருப்தியும் கண்டனங்களுமடங்கிய அபயக் குரல்களும்—இனியும்—அதாவது அடுத்தகவுன்சில் கூட்டத்திலாவது—எழாதிருக்க வழி வகைகள் செய்ய பெடரல் கவுன்சிலின் நிர்வாகிகள் முன்வரவேண்டுமென்பதுதான். இதைத்தான் நாம் மனமார விரும்புகிறோம். இந்த குறைகளினின்றும் பெடரல் கவுன்சில் தன்னைத்தானே பாதுகாத்துக்கொள்ள வேண்டுமென்பதுதான் நம் ஆசை.

கடைசி நாள் கூட்டத்தில்தான் நமது மதிப்பிற்குரிய பொதுச் செயலாளர் P. M. கிருஷ்ணன் அவர்களும், நானும், கூட்டத்தின் உறுப்பினர்களிடையே பேசும் வாய்ப்பு கிடைத்தது. நமது குறைகளைப்பற்றியும், தேவைகளைப்பற்றியும் பேச அன்றுதான் எங்களுக்கு வாய்ப்புக் கிடைத்தது. நமது பொதுச் செயலாளரவர்கள் தன்னுடைய வெகு குறுகிய கால சொற்பொழிவில் நமது தேவைகளை மிகவும் விளக்கமாக எடுத்துரைத்தார். நமது சம்பள விகிதம் மாற்றியமைப்பதைப்பற்றியும்—E.D. பிரான்சுகளை நிரந்தர இலாகா பூர்வமான ஆபீஸுகளை யொழித்துவிட்டுப் புதிதாக ஏற்படுத்தி வருவதைக் கண்டித்தும்—நம்மவருக்கு வைத்திய வசதிகளளிப்பதைப் பற்றியும் — சிப்பந்திகளுக்கு குடைகள் வழங்கப்படுவதைப் பற்றியும், S. S. L. C. படித்த சிப்பந்திகளுக்கு பிரமோஷன் கொடுப்பதை பற்றியும் அவர் விளக்க உரையாற்றினர். அவருக்குத் தரப்பட்ட குறுகிய காலத்தில் அவர் இவற்றையெல்லாம் அவசர அவசரமாக எடுத்துரைக்க நேர்ந்தது. ஆனல், 'P. & T. லேபர்' என்ற பத்திரிக்கையில், மற்றெல்லாருடைய பேச்சுக்களையும் அவர்களால் விவரமாக வெளியிட முடிந்திருந்தும்கூட நம்மவருக்கு ஒரு வரியையும் பிரசுரிக்க கருணையை அவர்கள் காட்டவே இல்லை. அந்த பேச்சையே

அவர்கள் முழுக்க, முழுக்க பிரசுரிக்கவே இல்லை. ஆனால் இதுவல்ல நமக்கிருக்கும் பிரச்னை. அவர்கள் வெளியிடாவிட்டால் அதற்காக வருந்துவது நமக்குப் பழக்கமல்ல. அத்தகைய விளம்பரங்களும் சித்தாப்புக்களும் நமக்குத் தேவையில்லைதான். ஆனால், கண்ணியமும், சகிப்புத்தன்மையும், கடமையுணர்ச்சியும் மற்றொரு பக்கத்திலிருந்து கிடைப்பதில்லையே என்றுதான் இதனை மனம் வருந்தி எடுத்துக் காட்டவேண்டியிருக்கிறதே தவிர வேறில்லை. எது எங்ஙனமானாலும் நம்மால் எடுத்துக் காட்டப்பட்ட இவ்வளவு பிரச்சனைகளையும், விவரமாகவும், கவனத்துடனும் அரசாங்கத்துடன் விவாதித்து நமக்கு நன்மை விளையும்படி செய்தாலே அதுவே நமக்குப் போதுமானதாகும்.

நிற்க எனக்குப் பேசக் கிடைத்த வாய்ப்பில் நான் சில பிரச்சனைகளை வலியுறுத்திப் பேசுகிறன். அதாவது; அந்தந்த பிராந்திய மொழி கற்றவரையே அந்தந்த பிராந்திய உயர்தர அதிகாரியாக நியமிக்கவேண்டும் என்பதை நான் வலியுறுத்துகிறேன்: ஏனென்றால் சமீபத்தில் டைரெக்டர்-ஜெனரலின் உத்திரவுபடி அவ்வந்த பிராந்திய உயர்தர அதிகாரி அந்தந்த பிராந்தியத்தைச்சேர்ந்தவராக இருக்கக் கூடாது என்பதுதான். அதாவது சென்னைக்கு ஒரு தமிழர் அல்லாது வடநாட்டிலிருந்து இறக்குமதி செய்யவேண்டும் என்பதுதான் அந்த உத்திரவு. இதனால் பாதிக்கப்படுவோர்கள், போஸ்ட்மென்களும்—நான்காம் வகுப்புச் சிப்பந்திகளும்தான். நம் மொழி தெரியாதவர்களிடம், வேற்றுப் பொது மொழியில் தேர்ச்சிபெற முடியாத நாம் விவாதித்து முடிவுகாணுவது என்பது மிகவும் கடினமான பிரச்சனையாகும். இது நிறைவேற வேறு மொழிதெரிந்த ஒருவரின் துணையை நமக்கும்—போஸ்ட்மாஸ்டருக்குமிடையே நாம் நாடவேண்டியிருக்கிறது. இது தொல்லைதான். எனவேதான் வேற்று மொழியையுடையவர் நமக்கு வேண்டாமென்கிறோம். எனவே இந்த பிரச்சனையில் மத்திய யூனியன் தலையிட்டு ஆவனசெய்வதோடு—தற்போது இருக்கும் இதற்கு மாறான டைரக்டர் ஜனரலின் உத்திரவை மாற்றியமைக்கவும் மும்முரமாக ஒத்துழைக்க வேண்டுமென்றும் எடுத்துச் சொல்ல விரும்புகிறேன்.

எனவே நாம் ஒரு நிரந்தர தொழிற் சங்கத்தில் இணைந்து இருக்க ஒப்புக்கொண்டதன் நோக்கமெல்லாம் நமது குறைபாடுகளும் துயரங்களும் சீக்கிரம் மறையும்—மறையச்செய்வார்கள் நமது தலைவர்கள் என்ற ஒரே நம்பிக்கையால்தான்-ஆனால் நமது பல நாட்களின் குறைபாடுகள் அதிலும் மிகச்சாதாரணமானவைகள் கூட இன்னும் மறைவதற்கு தொழிற் சங்கம் வழி வகை செய்ய முன்வந்தபாடா இல்லை. எனவே இனியாவது நமது மிகச் சாதாரண குறைபாடுகளும்—நமது மற்ற முக்கியமான பிரச்சனைகளும் தீர வழி செய்ய தொழிற் சங்கம் தகுந்த நடவடிக்கைகளை அதிலும் மிகத் துரித நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அப்போதுதான் ஒற்றுமை மனப்பான்மையும் ஒத்துழைக்கும் மாபெரும் சக்தியும் நம்மவர்களிடமிருந்து அவர்களுக்கு கிடைக்கும்.

---

## கவனிக்க வேண்டுகிறோம்

அகில இந்திய, தபால்காரர்கள் 4-ம் வகுப்பு சிப்பந்திகள் சங்கத்தின் சென்னை மாநில 2-வது மாநாடு 1956 ஜூலை 7, 8உ களில் கோயில்பட்டியில் திரு டி. எஸ். இராமாநுஜம் அவர்கள் தலைமையில் மிகச் சிறப்பாக நடந்தேறியது. முழு விவரங்கள் அடுத்த இதழில் வெளிவரும்.

# Welcome Address

PRESENTED BY

THE ALL INDIA POSTAL EMPLOYEES' UNION

(POSTMEN & CLASS IV—MADRAS CIRCLE)

TO

## SHRI LALA ACHINT RAM, M. P.

*(President, A. I. P. E. U. Postmen & Class IV C. H. Q., Delhi)*

---

**Revered Sir,**

On the first occasion of your visit to this City of Madras, as President of the A. I. P. E. U—Postmen and Class IV, C. H. Q. Delhi we deem it a great privilege and pleasure to have you in our midst and to accord our most cordial and warm welcome.

You have earned our undying gratitude by throwing yourself in the service of the Postmen and Class IV staff in espousing our right and just cause and in the redress of our grievances.

We do not wish to mar the harmony of this happy occasion by cataloguing the various problems affecting the Postmen and Class IV staff of the Department to-day. We would, however, like to mention here a few of our vital demands and we feel confident that you will spare no pains to focus the attention of the Government on these grievances and do the needful.

You are aware of the fact that we struck work in the year 1946 protesting against the bad service conditions prevailing then, and, as a result, the Government appointed a Pay Commission to go into the pay structure of the employees and submit its recommendations The Pay Commission's recommendations were not satisfactory. They were most disappointing so far as the Postmen and Class IV employees were concerned, in as much as the revision recommended by the Pay Commission for these categories of staff meant reduction in their maximum pay rather than an increase which ought to have been the case. For example, the maximum pay of the Sorting Postmen before the Pay Commission Award was Rs. 100/- and now this has been reduced to Rs. 85/- Likewise the maximum pay of Postmen which was Rs. 60/- before the Pay Commission Award is now fixed at Rs. 50/. The rate of increment as fixed by the Pay Commission for the Class IV staff is a paltry sum of As 8/- per annum. These categories of staff reach their maximum pay within a span of 10 years and afterwards stagnate on the same scale till retirement. We fervently hope that your goodself will appraise Government

of this position and urge the necessity for the appointment of another Pay Commission ere long for the removal of the anomaly of this nature and remedy the wrong done to the low paid employees.

Another major grievance which we would like to place before your good self is that there is age-bar for the promotion of Class IV staff to the Postmen Class III and other cadres. This adversely affects the interests of these employees because many aspirants in this cadre are disabled from appearing at the promotion tests and bettering their prospects. Unless this age-bar is removed, the Department cannot be true to its statement that it is only in the P & T Department there is a facility for the Class IV staff to rise up to the status of the Director-general.

There is no time-test prescribed for sanctioning posts in the Postmen and Class IV cadres while for the Class III cardes a time-test is in force. This causes much hardship and suffering to the Postmen and Class IV staff. Due to lack of a time-test the Union is unable to pursue effectively its case for sanction of additional staff.

Yet another demand is that only in the Madras Circle, appointment to Boy-Peon and Class IV cadres is made through the Employment Exchange while for the appointments to the Class III cadres in the same Deptt, the medium of the Employment Exchange is dispensed with. Besides, the system of recruitment through the Employment Exchange is not followed in the Punjab Circle.

The Employment Exchange places numerous impediments in the way of the sons and dependents of the Postmen and Class IV staff securing employment in the P & T Department.

Last but not the least, the persons serving on extension of service are required to appear before the Medical Board every year. This gives such men a sort of apprehension and mental worry. This rule should be scrapped and extension of service granted without medical test. This would save unnecessary expenditure for government also.

We shall present a memorandum on other important subjects. We are sure that you will kindly examine it in detail and do your best to get the grievances redressed.

We wish you long life, useful service, and glory and express once more our joy in your being with us.

We remain,
Sir,
Yours faithfully,

MADRAS,
31st May 1956

**T. S. RAMANUJAM, M.A., L.L.B (London)**
**President and Members, A. I. P.E.U. Postmen and Class IV, Madras Circle Union.**

Published by P. M. Krishnan at No. 7, Coral Merchant Street and Printed by A. Dravidamani, B. A., at Selvam Prees 340, Mint Street, Madras-1